உ

கணபதி துணை

# காரிய சித்தி மாலை





பாடியவர் :

காசிப முனிவர்

மொழி பெயர்த்தவர் :

கச்சியப்ப முனிவர்

வெளியிட்டவர் :

தொகுப்பாளர்:- சு. அ. இராமசாமிப் புலவர்

கிடைக்குமிடம் :


சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

1/140, பிராட்வே, சென்னை - 1.

98, கீழைத்தேர்த் தெரு, திருநெல்வேலி-6.


 1964 [விலை 15 காசுகள்



## ஆனைமுகக் கடவுள் பெருமை

கணபதி என்றிடக் கலங்கும் வல்வினை
கணபதி என்றிடக் காலனுங் கைதொழும்
கணபதி என்றிடக் கரும மாதலால்
கணபதி என்றிடக் கவலை தீருமே.

விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான்—விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாந் தன்மையினால்
கண்ணிற் பணிமின் கனிந்து.

# காரியசித்தி மாலை

## முகவுரை

நாம் இவ்வுலகிற் செய்யும் எல்லாக் காரியங்கட்கும் தெய்வத் திருவருளே துணையாக இருக்கின்றது. தெய்வத் திருவருளை நம்பாமல் தொடங்கப்பெறுங் காரியங்கள் நல்ல முறையில் நிறைவேறுவதில்லை. அவ்வாறு நம்பாமல் தொடங்குங் காரியங்கள் இனிது நிறைவேறுமானால் அதனை முன் பிறப்பிற் செய்த நல்வினைப் பயன் என்றே கூறுதல் வேண்டும். எல்லாக் காரியங்களும் இடையூறில்லாமல் இனிது நிறைவேறச் செய்பவர் ஆனைமுகக் கடவுளே. இதுபற்றியே அக்கடவுளுக்கு விக்கிநேசுவரர் எனவும் பெயருண்டாகியிருக்கிறது. முன்காலத்தில் காசிப முனிவர் முதலியோர் தம்முன் அருள் செய்ய எழுந்தருளிய ஆனைமுகக் கடவுள்மீது எட்டுப் பாடல்கள் பாடினர். அப்பொழுது

அவர்கட்கு அருள்செய்ய எழுந்தருளிய பிள்ளையார், "அன்பர்களே! நீங்கள் நம்மீது பாடிய இப் புகழ்ப்பாக் களை எவரேனும் காலை, நண்பகல், மாலை என்னும் மூன்று வேளைகளினும் எம்மை நினைத்துப் பாடுவார்க ளாயின் அவர்களுடைய காரியங்கள் யாவும் வெற்றி யடையும். எட்டு நாட்கள் பாடினால் மனம் மகிழுமாறு நன்மையை அடைவார்கள். சதுர்த்தி விரத நாளில் எட்டுமுறை பாடினால் எண்வகைச் சித்திகளுங் கை கூடும். இரண்டு மாதங்கள் நாள்தோறும் பத்துமுறை பாடினால் பாடியவர்கட்கு அரச வசியம் உண்டாகும். இரண்டு மாதங்கள் நாள்தோறும் இருபத்தொருமுறை பாடுவோர், அரசாங்கம், மக்கள், சுற்றம், பொன், மணி, நெல், வாகனம், அடிமை என்னும் எண்வகைச் செல்வங்களையும் அடைவர்" என்று கூறி அருள்செய்து மறைந்தார். சில காரியங்கள் வெற்றி பெறுதலை வேண்டிய யான் நூலிற் கூறியவாறு வெற்றியுண்டா

கின்றதா என்று மூன்று நாட்கள் மூன்று வேளைகளி னும் பாடிப்பார்த்தேன். எனக்கு மனநிறைவு உண் டாகுமாறு எண்ணிய காரியம் இனிது நிறைவேறியது. இதனால் களிப்புற்ற யான் காரியசித்திக்கு இவ்வளவு எளிமையாக வழியிருக்கிறதே இதனை எல்லோரும் அறியுமாறு வெளிப்படுத்துவோம் நல்வினையும் நம்பிக் கையும் உடையோர் பாடிப் பலன்பெறட்டும் என்னும் எண்ணத்தோடு இதனை இவ்வாறு சிறிய நூல் வடிவில் காரியசித்தி மாலை என்னும் பெயரோடு வெளிப்படுத்த லானேன். தெய்வத் திருவருளில் நம்பிக்கையுடை யோர் இதனைப் பாடிப் பலன் பெறுவார்களாக.

15—4—64
பைந்தமிழ்ப்பண்ணை
கருப்பக்கிளர்
தஞ்சைமாவட்டம்

சு. அ. இராமசாமிப்புலவர்



நூல்

பந்தம் அகற்றும் அநந்தகுணப்
பரப்பும் எவன்பால் உதிக்குமோ
எந்த உலகும் எவனிடத்தில்
ஈண்டி இருந்து கரக்குமோ
சந்த மறைஆ கமங்கலைகள்
அனைத்தும் எவன்பால் தகவருமோ
அந்த இறையாம் கணபதியை
அன்பு கூரத் தொழுகின்றோம்.

[உலக பந்தங்களை யெல்லாம் நீக்குவதாகிய கணக்கற்ற நற்குணப் பெருக்கங்களும் எக்கடவுளிடத்தில் இருந்து தோன்றுகின்றனவோ; எல்லா உலகங்களும் எக்கடவுளிடத்தில் பொருந்தியிருந்து மறைகின்றனவோ; இசை வடிவான மறைகளும் ஆகமங்களும் கலைகள் முதலிய யாவும் எக்கடவுளிடத்தில் இருந்து தக்கவாறு உண்டாகின்றனவோ அத்தகைய தலைமையுடைய ஆனைமுகனை மிகுந்த அன்போடு வணங்குகின்றோம்.] 1

உலகம் முழுதும் நீக்கமற
ஒன்ருய் நிற்கும் பொருளெவனவ்
வுலகிற் பிறங்கும் விகாரங்கள்
உருத மேலாம் ஒளியாவன் ?
உலகம் புரியும் வினைப்பயனை
ஊட்டுங் களைகண் எவன்அந்த
உலக முதலைக் கணபதியை
உவந்து சரணம் அடைகின்ரும்.

[எல்லா உலகங்களினும் நீக்கமில்லாமற் பொருந்தி ஒரே பொருளாக நிற்கும் கடவுள் எவனுக இருக்கின்ருனே? உலகத்திலே வெளிப்பட்டுத் தோன்றுகின்ற மாறுபாடுகள் பலவும் தன்னிடத்திலே வந்து பொருந்தாமல் தான் என்றும் ஒரே நிலையுடைய மேலான ஒளியாக விளங்குகின்ற கடவுளாக இருப்பவன் எவனே ? உலகத் துயிர்கள் செய்கின்ற நல்வினை தீவினை ஆகியவைகளின் பயனை நல்கும் பற்றுக் கோடாக இருப்பவன் எவனே அந்த உலக முதற்பொருளாகிய கணபதியிடத்தில் மகிழ்ச்சியோடு அடைக்கலம் புகுகின்ரேம்.]

இடர்கள் முழுதும் எவனருளால்
எரிவீ ழும்பஞ் செனமாயும்
தொடரும் உயிர்கள் எவனருளால்
சுரர்வாழ் பதியும் உறச்செய்யும்
கடவுள் முதலோர்க் கூறின்றிக்
கருமம் எவனல் முடிவுறும்அத்
தடவு மருப்புக் கணபதிபொன்
சரணம் சரணம் அடைகின்றும்.

[உண்டாகின்ற துன்பங்களெல்லாம் எந்தக் கடவுளுடைய திருவருளால் தீயிடைப்பட்ட பஞ்சைப்போல் அழிந்தொழியுமோ; பல பிறப்புக்களை அடையும் உயிர்கள் எக்கடவுளினுடைய திருவருளினல் தேவர்கள் வாழும் உலகத்தையும் அடையுமோ தேவர்கள் முதலியவர்கட்கு எத்தகைய இடையூறும் உண்டாகாமல் அவர்கள் தொடங்கிய காரியங்கள் எக்கடவுளுடைய திருவருளால் முடிவுபெறுமோ அத்தன்மை பொருந்திய பெரிய தந்தங்களை யுடைய ஆனைமுகக்கடவுளின் அழகிய திருவடிகளிலே அடைக்கலம் புகுகின்றோம்.] 3

மூர்த்தி யாகித் தலமாகி
முந்நீர் கங்கை முதலான
தீர்த்த மாகி அறிந்தறியாத்
திறத்தி னும் உயிர்க்குநலம்
ஆர்த்தி நாளும் அறியாமை
அகற்றி அறிவிப் பான்எவன்அப்
போர்த்த கருணைக் கணபதியைப்
புகழ்ந்து சரணம் அடைகின்றாம்.

[கடவுளின் வடிவமாகியும், அக் கடவுள் எழுந்தருளிய பதியாகியும், கடல் கங்கை முதலிய புனித நீராகியும், அறியப் பெற்றும் மெய்ம்மைத் தன்மையை அளவிட்டறியப் பெருத திறத்தை யுடையவனாய், உலகத்துயிர்கட்கு நன்மைகளைக் கொடுத்து நாள்தோறும் அவ்வுயிர்த் தொகைகளின் மடமையைப் போக்கி மெய்ம்மைத் தன்மையை அறிவித்தருளுகின்றவனாகிய கடவுள் யாவனோ அக்கடவுளாகிய நிரம்பிய திருவருளினையுடைய ஆனைமுகக் கடவுளை யாம் போற்றிப் புகழ்ந்து அடைக்கலமாக அடைகின்றோம்.] 4

செய்யும் வினையின் முதல்யாவன்
செய்யப் படும்அப் பொருள்யாவன்
ஐயம் இன்றி உளதாகும்
அந்தக் கருமப் பயன்யாவன்
உய்யும் வினையின் பயன்விளைவில்
ஊட்டி விடுப்பான் எவன்அந்தப்
பொய்யில் இறையைக் கணபதியைப்
புரிந்து சரணம் அடைகின்ரும்.

[உலகத்தார்கள் செய்யுங் காரியங்கட்கு முதல்வனுக இருப்பவன் எவன்? செய்யப்படுகிற செயல்களெல்லாம் எவன்? ஐயப்பாடில்லாமல் உள்ளதாகின்ற காரியங்களின் பயனுக விளங்குகின்றவன் எவன்? உயிர்களை வாழச்செய்கின்ற நல்வினையின் பயனை நடைமுறையில் ஊட்டிவிடுகின்றவன் எவன்? அத்தன்மைகளெல்லாம் பொருந்திய பொய்ம்மைத் தன்மை அற்ற தலைவனுகிய ஆனைமுகக் கடவுளை விரும்பி அடைக்கலம் புகுகின்ரேம்.]

வேதம் அளந்தும் அறிவரிய
விகிர்தன் யாவன் விழுத்தகைய
வேத முடிவில் நடம்நவிலும்
விமலன் யாவன் விளங்குபர
நாத முடிவில் வீற்றிருக்கும்
நாதன் எவன்என் குணன்எவன்அப்
போத முதலைக் கணபதியைப்
புகழ்ந்து சரணம் அடைகின்றாம்.

[மறைகளானவை அளவிட்டறிய முயன்று அளவு செய்து பார்த்தும் அறிய இயலாதவாறு விளங்குகின்ற மேன்மையை உடையவன் எவன்? மேன்மைத் தன்மை பொருந்திய மறைகளின் முடிவிற் கூத்தியற்றும் மேலான கடவுள் யாவன்? விளங்குகின்ற மேலான நாத தத்துவத்தின் முடிவில் எழுந்தருளியிருக்கும் தலைவன் எவன்? எண்வகைக் குணங்களையும் உடையவன் எவன்? அத்தன்மைகளெல்லாம் அமையப் பெற்ற மெய்யறிவுக்குத் தலைவனாகிய ஆனைமுகக் கடவுளைப் புகழ்ந்து அடைக்கலம் புகுகின்றோம்.]

மண்ணின் ஓர்ஐங் குணமாகி
வதிவான் எவன்நீர் இடைநான்காய்
நண்ணி அமர்வான் எவன்தீயின்
மூன்ருய் நவில்வான் எவன்வளியின்
எண்ணும் இரண்டு குணமாகி
இயைவான் எவன்வான் இடைஒன்ரும்
அண்ணல் எவன்அக் கணபதியை
அன்பிற் சரணம் அடைகின்ரும்.

[மண்ணினுடைய ஐந்து குணங்களாகிப் பொருந்துகின்றவன் எக்கடவுள்? நீரினிடத்திலே நான்கு குணங்களாகித் தங்குகின்றவன் எக்கடவுள்? தீயினிடத்திலே மூன்று குணங்களாகச் சொல்லப்படுபவன் எக்கடவுள்? காற்றினுடைய நினைக்கப்பெறும் இரண்டு குணங்களாகிப் பொருந்துபவன் எக்கடவுள்? விண்ணினிடையே ஒரே தன்மையாக விளங்கும் பெருமை பொருந்தியவன் எக்கடவுள்? அத்தன்மைகளெல்லாம் அமையப் பெற்ற ஆனைமுகக் கடவுளிடம் அன்பினெடு அடைக்கலம் புக்கின்ரேம்]

பாச அறிவில் பசுஅறிவில்
பற்றற் கரிய பரன்யாவன்?
பாச அறிவும் பசுஅறிவும்
பயிலப் பணிக்கும் அவன்யாவன்?
பாச அறிவும் பசுஅறிவும்
பாற்றி மேலாம் அறிவான
தேசன் எவன்அக் கணபதியைத்
திகழச் சரணம் அடைகின்றோம்.

[உலகப் பற்றுள்ள அறிவினாலும், உயிர்த் தொகைகளினுடைய அறிவினாலும் கண்டுணர்தற்கரிய மேலானவன் எக்கடவுள்? உலகப்பற்றுள்ள அறிவும் உயிர் அறிவும் பொருந்துமாறு செய்கின்றவன் எக்கடவுள்? உலக அறிவையும் உயிர் அறிவையும் தன்னுடைய திருவருட்டன்மையினாலே மாற்றி மேலான மெய்யறிவைக் கொடுக்கும் ஞான ஒளி உடைய கடவுள் எவன்? அத்தன்மைகளெல்லாம் அமையப்பெற்ற ஆனைமுகக் கடவுளை நன்கு பொருந்துமாறு அடைக்கலம் புகுகின்றோம்.] 8

## நூற்பயன்

இந்த நமது தோத்திரத்தை
யாவன் மூன்று தினம்மும்மைச்
சந்தி களில்தோத் திரஞ்செயினும்
சகல கரும சித்திபெறும்
சிந்தை மகிழச் சுகம்பெறும்எண்
தினம்உச் சரிக்கின் சதுர்த்தியிடைப்
பந்தம் அகல ஓர்எண்கால்
படிக்கில் அட்ட சித்தியுறும்.

(அ - ரை) மும்மைச் சந்திகள் – காலை, நண்பகல், மாலை என்னும் மூன்று வேளை. சதுர்த்தி – சதுர்த்தி நாள். அட்ட சித்தி - அட்டமா சித்திகள். (க)

திங்கள் இரண்டு தினந்தோறும்
திகழ ஒருபான் முறையோதில்
தங்கும் அரச வசியமாம்
தயங்க இருபத் தொருமுறைமை
பொங்கும் உழுவ லால்கிளப்பின்
பொருவின் மைந்தர் விழுக்கல்வி
துங்க வெறுக்கை முதற்பலவும்
தோன்றும் எனச்செப் பினர்மறைந்தார்.

(அ - ரை.) *ஒருபான்முறை - பத்துத் தடவை. உழுவலால் கிளப்பின் - மெய்யன்போடு பாடினால். பொருவின் மைந்தர் - ஒப்பற்ற புதல்வர். துங்க வெறுக்கை - மேலான செல்வம்.* (உ)

# ஆனைமுகக் கடவுள் போற்றி

[முற்கூறிய பாடல்களைப் பாடிக் காரியசித்தி பெற்றவர்கள் தங்கள் காரியம் நிறைவேறியவுடன் அப்பெருமானை மறந்து, செய்ந்நன்றி மறந்த தீவினைக்கு உள்ளாகாமல், இப் பாடல்களால் நாள்தோறும் பிள்ளையாரைப் பாடிப் போற்றுதல் வேண்டும். அவ்வாறு போற்றினால் மேலும் பல நன்மைகள் உண்டாம்.]

தத்துவா தீத போற்றி
தத்துவப் பொருளே போற்றி
தத்துவ முதலே போற்றி
தத்துவ சொரூப போற்றி
தத்துவத் தியன்ற தாத்து
விதங்களும் ஆனாய் போற்றி
தத்துவ அறிவுக் கெட்டாத்
தயங்குபே ரறிவே போற்றி. 1

உடலினுக் குயிரே போல
உயிர்க்குயிர் ஆனாய் போற்றி
உடலுயிர்க் கறிவு நல்கி
உடலினைக் கழிப்பாய் போற்றி
உடலுயிர் எனப்பின் நீங்கா
ஒற்றுமைப் பொருளே போற்றி
உடனுறை உயிர்க்கும் எட்டா
ஒளிர்பெருஞ் சோதி போற்றி. 2

விரவுதத் துவத்தின் நீங்கி
மேம்லன நின்ற வாவி
வரமுற உருவு கொண்டு
வந்தருள் குரவ போற்றி
பரவும்ஐந் தொழிலை நீக்கி
உயிரினைப் பணிப்பாய் போற்றி
துரியத்தின் உயிரை வாங்கும்
சுடர்ப்பெருங் கடலே போற்றி. 3

பத்தர்கள் வழங்கா நின்ற
பலவுங்கைக் கொள்வாய் போற்றி
புத்திகள் போகத் தார்க்குப்
புணர்த்தருள் போகி போற்றி
முத்தியை யோகத் தார்க்கு
முடித்தருள் யோகி போற்றி
எத்தொழி லவர்க்கும் அந்தப்
பயனருள் இறைவ போற்றி. 4

வேண்டிய அடியார்க் கெல்லாம்
விக்கினங் கெடுப்பாய் போற்றி
வேண்டிவந் தனைசெய் யார்க்கு
விக்கினங் கொடுப்பாய் போற்றி
வேண்டுவார் வேண்டிற் றெல்லாம்
விளைத்தருள் விமல போற்றி
மாண்டதுட் டர்களைக் கொல்லும்
மறமிகு மள்ள போற்றி. 5






## காரியசித்தி மா

கிடைக்குமிடங்கள் :—

1. மு. கோ. கிருட்டிண சுவாமிக
   பால்சுவாமிகள் மடம், கரந்தை,

2. மகா. விசுவநாத சுவாமிகள்
   திருக்களர் மடாலயம், தஞ்சைமாவட்டம்.

3. இ. மா. கோபாலகிருட்டிணக் கோன்,
   புத்தகசாலை, வடக்குச் சித்திரை வீதி, மதுரை.

4. திரு. கா. சிவானந்த சுவாமிகள், (தலைவர்)
   சிவப்பிரகாச சுவாமிகள் மடம்,
   வியாசர்பாடி, சென்னை-12.

5. மௌன சுவாமிகள் மடம்,
   சபாநாயகர் தெரு, சிதம்பரம்.

---

Paari Achakam, 127, Broadway, Madras-1.